Published with the financial assistance from the
Ministry of Education, Government of India.

ஹிதபாஷிணீ வெளியீடு-7

# श्री दक्षिणामूर्तिस्तोत्रम्

लघुतत्वसुधाख्यव्याख्यासमेतम्



# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

லகுதத்வஸுதா என்ற வியாக்யானத்துடன் கூடியது.

தமிழில் உரை எழுதி பிரசுரித்தவர் :
**R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,**
*1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.*

காபிரைட்] 1967 [விலை ரூ. 0-80

## பொருளடக்கம்

Published with the financial assistance from the
Ministry of Education, Government of India.

ஹிதபாஷிணீ வெளியீடு-7

श्री शङ्करभगवत्पादाचार्यप्रणीतं

# श्री दक्षिणामूर्तिस्तोत्रम्

श्री स्वयंप्रकाशयतिविरचितलघुतत्त्वसुधाख्यव्याख्यासमेतम्

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யஸ்வாமிகள்
அவர்களாலியற்றப்பட்ட

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

ஸ்ரீ ஸ்வயம் பிரகாசயதி அவர்களாலியற்றப்பட்ட
லகுதத்வஸுதா
என்ற வியாக்யானத்துடன் கூடியது.

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி மீ 29உ



தமிழில் உரை எழுதி
பிரசுரித்தவர் :

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,
*1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.*

1967

# PREFACE

The stotras written by Sri Sankara Bhagavatpadacharya may be broadly divided into two groups, viz. Bhakti Stotras and Vedanta Stotras. "Sivanandalahiri", and "Bhaja Govindam" etc., belong to the former category, while "Dakshinaamoorthy Stotram", "Harimeede Stotram" and others are Vedanta Stotras. Although Sri Sankara's Stotras all expound Vedantic thought, the Vedanta Stotras are predominantly and exclusively Vedantic in character. Therefore, these latter are generally known as *Prakaranams*.

Out of all these Vedanta Stotras, "Dakshinaamoorthy Stotram" occupies a peculiarly pre-eminent place and is also the most popular and extant. This Stotra is recognised to contain the essence and gist of the entire Vedanta philosophy. Written in attractive metre and diction, and containing only ten stanzas, this Stotram is useful, and is used, as a happy and handy medium for meditation and expounding by scholars of Vedanta.

Within its brief compass, it contains the four sections of Brahma Mimamsa sastra, viz. "*Samanvaya*", "*Avirodha*", "*Sadhana*" and "*Phala*". The first three slokas contain the basic tenets of Advaita philosophy and Samanvaya; stanzas 4 to 8 represent "Avirodha", ninth is "Sadhana" and the tenth the resulting "Phala". It also contains a refutation of the rival philosophies of Sankhya, Vaiseshika and Bouddha. As this Stotram is conceived in the form of adorations to Guru Dakshinaamoorthy, it forms an important portion of the Santi Patam usually sung before and after teaching of the Sankara Bashyam.

In the words of the present commentator, Sri Sankara has churned by "Vichara" the Milk-Ocean of the Upanishads by means of the Mandhara Mountain of "Brahma

Sutrams" and obtained the Amrita of "Advaita", which is contained in the vessel called "Sri Dakshinaamoorthy Stotram". No words can better express its importance.

Although it is better known as "Dakshinaamoorthy Ashtakam" as it has traditionally consisted of ten stanzas, scholars have always preferred to refer to it as "Sri Dakshinaamoorthy Stotram".

There is an elaborate commentary on this text, known as the "Manasollasa". This latter is expounded in the familiar "Vaartika" style, and its author is Sureswaracharya, the famous disciple of Sri Sankara.

A printed copy of the present commentary entitled "Laghutatvasudha" came into our hands a few years ago. This, along with its Tamil translation was published as a serial in our journal, the "Hithabashini". As printed copies of the original commentary are not available, and as its simple and easy style of exposition was greatly attractive to its readers, there was a persistent demand to publish the text, together with the translation in the form of a book – the present effort is the result. The Tamil translation has been retouched here and there, to make it more easily understood.

The author of this vyakyana is Swayamprakasayati, and as he begins the text with two incantations to Kaivalyananda Yogi and Suddhananda Yati, it is presumed that they were his gurus. His other writings include. (i) Harithatvamukthavali (ii) Vedanta Sangraham (iii) Hasthamalakeeya Vyakhya and (iv) Ekaslokee Vyakhyanam.

The manuscript of this commentary which is found in the Saraswathi Mahal Library, Thanjavur, is entitled

"Tatvasudha", but as the printed copy in our possession is called "Laghutatvasudha", we have preferred to retain this name. This text bears all the marks of an ideal vyakhyana, viz. introduction, detailed word-forword meanings, quotations from parallel authorities, doubts that arise in the context and their resolutions. A free prose rendering of each stanza is also included. A careful study of this commentary will reveal the important tenets of the Advaita philosophy.

By the grace of Sri Sankara, we are trying to publish the other writings of this author also, together with Tamil translations.

Our special thanks are due to the Ministry of Education, Government of India, without whose financial assistance, this effort would not have been possible.

**R. Muthukrishna Sastri**
*Tamil Translator and Publisher.*

# முகவுரை

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரியாள் அருளிச்செய்த பல அரிய ஸ்தோத்ரங்களை "பக்தி ஸ்தோத்ரங்கள்" என்றும், "வேதாந்தஸ்தோத்ரங்கள்" என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சிவானந்தலஹரீ, பஜகோவிந்தம் முதலியவை பக்திஸ்தோத்ரங்கள். தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம், ஹரிமீடே ஸ்தோத்ரம் முதலியவை வேதாந்த ஸ்தோத்ரங்கள். பொதுவாக அவர்களுடைய ஸ்தோத்ரங்கள் எல்லாவற்றிலும் வேதாந்தக் கருத்துக்கள் நிரம்பியிருக்குமென்றாலும் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் முதலியவற்றில் முழுவதும் வேதாந்தக் கருத்துக்களே காணப்படுகின்றன. ஆதலால் இவற்றைப் பிரகரணம் என்றும் கூறுவர். இவ்வித ஸ்தோத்ரங்களுள் இந்த தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் மிகச் சிறந்தது என்பதை பலவிதமாக நிரூபிக்கலாம்.

அத்வைத சித்தாந்தங்கள் எல்லாவற்றையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் இதில் விளக்கியுள்ளார். அழகிய நடையில் உள்ள பத்தே சுலோகங்களில் இவற்றையெல்லாம் அடக்கியிருப்பதால் அத்வைத சித்தாந்தங்களை விரைவில் அநுஸந்தானம் செய்ய இந்நூல் மிக பயன்படுகிறது.

பிருஹ்மமீமாம்ஸா சாஸ்திரத்தின் நான்கு அத்யாயங்களுடைய விஷயங்களாகிய "ஸமந்வயம், அவிரோதம், ஸாதனம், பலம்" என்ற நான்கு விஷயங்களும் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன.. முதல் 3 சுலோகங்களால் அத்வைத ஸ்வரூபமும், அதில் வேதாந்தங்களின் ஸமந்வயமும், 4 முதல் 8 வரை அவிரோதமும், 9 ல் ஸாதனமும், 10 ல் பலமும் விளக்கப்பட்டிருப்பது உற்று

கவனித்தால் விளங்கும். ஸாங்கியம், வைசேஷிகம், பௌத்தம் முதலிய பிற மதங்கள் சரியல்ல என்பதையும் சூசனம் செய்துள்ளார். எல்லாவற்றையும்விட இது குருவந்தநரூபமாக அமைந்திருப்பதும் இதற்கு ஒரு தனிச்சிறப்பு. இக்காரணம் பற்றியே சாந்திபாடபுரஸ்ஸரம் பாஷ்யம் படிப்பவர்கள் பாட ஆரம்பத்திலும் முடிவிலும் இந்த சுலோகங்களைச் சொல்லி குருவந்தநம் செய்துவருகின்றனர்.

இதன் பெருமையை இந்த உரையாசிரியர் மிக அழகாக வர்ணித்துள்ளார். "பிருஹ்மஸூத்ரங்கள்" என்ற மந்தரபர்வதத்தால் "விசாரம்" என்ற கடைதலைக் கொண்டு "உபநிடதங்கள்" என்ற பாற்கடலிலிருந்து எடுக்கப்பட்ட "அத்வைதம்" என்ற அமிருதத்தை இந்த "தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் என்ற குடத்தில் வைத்துப் பாதுகாத்துள்ளார். இதற்கு "மாநஸோல்லாஸம்" என்ற ஒரு விரிவான உரை இருக்கின்றது. அது "வார்த்திகம்" என்ற வியாக்யான முறையைத் தழுவி, பகவத்பாதாசார்யசிஷ்யர்களுள் தலைசிறந்த ஸுரேச்வராசார்யாள் அவர்களால் எழுதப்பட்டது.

"லகுதத்வஸுதா" என்ற இச்சிறிய எளிய உரையின் அச்சுப் பிரதி ஒன்று சில ஆண்டுகளுக்கு முன் நமக்குக் கிடைத்தது. அதைத் தமிழ் உரையுடன் ஹிதபாஷிணியில் பகுதி பகுதியாக அச்சிட்டிருந்தோம். இந்த உரை மிகத் தெளிவாகவும், எளிதமாகவும், சுருக்கமாகவும் அமைந்திருப்பதால் இதை மறுமுறை அச்சிட்டால் மிக உதவியாக இருக்கும் எனப் பலர் விரும்பியதாலும், பழைய அச்சுப்பிரதி கூட இப்பொழுது கிடைப்பதரிதாக இருப்பதாலும் சில முக்கிய மாறுதல்களுடன் திருத்தி அமைத்து இந்நூலை இப்பொழுது அச்சிட முன்வந்துள்ளோம்.

இச் சிறந்த வியாக்யானத்தை இயற்றிய "ஸ்வயம் பிரகாசயதி" என்பவர் "கைவல்யாநந்தயோகி" "சுத்தாநந்தயதி" என்ற இரு பெரியோர்களை வணங்கி இந்நூலை எழுதத் தொடங்குவதால் அவ்விருவரும் இவருடைய ஆசிரியர்கள் எனத் தெரியவருகிறது. இவர் எழுதிய மற்ற நூல்களாவன : 1) ஹரிதத்வமுக்தாவளீ, 2) வேதாந்தஸங்கிரஹம், 3) ஹஸ்தாமலகீயவ்யாக்யா, 4) ஏகசுலோகீ வ்யாக்யானம் முதலியவை.

தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹாலில் உள்ள இந்த உரையின் கையெழுத்துப் பிரதிகளில் இதன் பெயர் "தத்வஸுதா" என்றே காணப்படுகிறது. ஆனால் பழைய அச்சுப் பிரதியில் "லகுதத்வஸுதா" என்றிருப்பதால் அதையே நாம் குறிப்பிட்டுள்ளோம்.

"நத்வாரபே லகுவ்யாக்யாம் தக்ஷிணாமூர்த்தேஸ்துதே:" என்று முதல் சுலோகத்தில் "லகுவ்யாக்யா" எனக் குறிப்பிட்டிருப்பதால் "தத்வஸுதா" என்பதுடன் "லகு" என்பதையும் சேர்த்து ஒருக்கால் "லகுதத்வஸுதா" என்று பெயர் வைக்கப்பட்டிருக்கலாம்.

சிறந்த வியாக்யானத்திற்குரிய, "அவதாரிகை, பதச்சேதம், பதார்த்த விவரணம், அவசியமான மேற்கோள்கள், ஆங்காங்கு தோன்றும் சங்கை, அதற்கு ஸமாதானம்" முதலிய எல்லா அம்சங்களும் இதில் காணப்படுகின்றன. சுலோகங்களுக்கு அந்வயப்படி அர்த்தமும் எழுதப்பட்டிருக்கிறது. இந்த உரையை ஊன்றிப் படித்தால் அத்வைத சித்தாந்தத்தின் முக்கியமான பல அம்சங்களைத் தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி
*தமிழில் மொழிபெயர்த்துப்*
*பிரசுரித்தவர்.*

# श्री दक्षिणामूर्तिस्तोत्रम्

# ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம்

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्त्वं युवानं
वर्षिष्ठान्तेवसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः ।
आचार्येन्द्रं करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

மௌனம் என்ற வியாக்யானத்தினுலேயே பரப்ருஹ்மத்தின் உண்மை ஸ்வரூபத்தை விளக்கியவரும், பிருஹ்மநிஷ்டர்களாயும், வயது முதிர்ந்தவர்களாயுமுள்ள சிஷ்யர்களான ரிஷிகணங்களால் சூழப்பட்டவரும், ஸ்வயம் வாலிபராயும், கையில் சின்முத்திரையைத் தரித்தவரும், ஆனந்த வடிவராயும், தனது ஆத்ம ஸ்வரூபத்திலேயே ரமிப்பவரும், மலர்ந்த முகத்துடன் கூடியவரும், ஆசார்யர்களுக்கெல்லாம் ஆசார்யருமான தக்ஷிணமூர்த்திப்பெருமானை ஸ்தோத்திரம் செய்கின்றேன்.

குறிப்பு: இந்த சுலோகம் பல மூல புஸ்தகங்களில் காணப்படவில்லை. "விச்வம் பச்யதி" என்ற சுலோகம் முதல்தான் இந்தப் பிரகரணம் ஆரம்பமாகிறது. இருந்தாலும் இது தக்ஷிணமூர்த்தி ஸ்வரூபத்தை வர்ணித்து அவருக்கு வணக்கம் தெரிவிக்கின்றபடியால் மங்கள சுலோகம் என்ற முறையில் இங்கு பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த சுலோகம் இந்த வியாக்யான ஆரம்பத்தில் காணப்படுவதால் இந்த உரையாசிரியரால் எழுதப்பட்டதாகவும் இருக்கலாம். எப்படியிருப்பினும் இது அனைவராலும் ஆரம்பத்தில் படிக்கப்பட்டு வருகிறது.

# लघुतत्त्वसुधा

## லகுதத்வஸுதா

**कैवल्यानन्दयोगीन्द्र शुद्धानन्दयतीश्वरौ ।**
**नत्वारभे लघुव्याख्यां दक्षिणाशामुखस्तुतेः ॥**

"கைவல்யானந்தர்" என்ற சிறந்த யோகியையும், "சுத்தானந்தர்" என்ற உத்தமமான ஸந்யாஸியையும் வணங்கிவிட்டு தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்திற்கு ஒரு சிறிய உரையை எழுத ஆரம்பிக்கிறேன்.

### अवतारिका

इह खलु सर्वज्ञो भगवान् भाष्यकारो लोकानुग्रहैकप्रयोजनकृतशरीरपरिग्रहः सकलवेदान्तदुग्धाब्धेः न्यायमन्दरेण विचारनिर्मथनादाविर्भूताद्वैतामृतस्य विन्यासकलशभूतं श्रीदक्षिणामूर्तिस्तोत्रं सकलोकानुजिघृक्षया भोक्तृजीव-भोग्य जगत्-भोगप्रदपरमेश्वर-मोक्षप्रदगुरूणां अत्यन्ताभेदबोधकं सकृत्पठनश्रवणार्थमननादिमात्रेण परमपुरुषार्थप्रापकमारभमाणः तस्य वेदान्तसारभूत नवनीतपिण्डात्मकत्वेन तदीयविषयादिभिरेव तद्वत्तासिद्धिमभिप्रेत्य आदौ प्रतीचस्सकलजगदधिष्ठानत्वेन परमेश्वरतां दर्शयन् दक्षिणाशामुखं परमेश्वरं मनसा पूजयति-विश्वमिति.

### முன்னுரை

லோகாநுக்கிரஹத்திற்கென்றே இவ்வுலகில் மானிட உடலுடன் தோன்றிய ஸர்வஜ்ஞான பகவான் பாஷ்யகாரர் (ஆதி சங்கரர்) ஸமஸ்த வேதாந்தங்களாகிற பாற்கடலிலிருந்து, நியாயங்களாகிற மந்தர

மலையைக்கொண்டு, விசாரம் என்ற கடைதலால் உண்டான அத்வைதம் என்ற அமிருதத்தை வைப்பதற்கு குடம் போன்றதும், போக்தாவான (பயனை அனுபவிக்கின்ற) ஜீவன், போக்யமான (அநுபவிக்கப்படுவதான) ஜகத், போகத்தை அளிக்கின்ற பரமேச்வரன், மோக்ஷத்தை அளிக்கும் குரு, இந்த நால்வர்களுக்கும் அபேதத்தைப் போதிப்பதும், ஒரு தடவை படிப்பது, கேட்பது, அதன் பொருளை மனனம் செய்வது முதலியவற்ருலேயே தலைசிறந்த புருஷார்த்தமான மோக்ஷத்தை அளிக்கவல்லதுமான இந்த தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரத்தை ஆரம்பிக்குமுன் அந்த ஸ்தோத்ரம் உபனிஷத்தாகிற சமுத்திரத்திலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட ஸார மான வெண்ணை உருண்டைபோல் இருப்பதால், உபனிடதங்களுக்குள்ள விஷயம், பிரயோஜனம் முதலியவையே இதற்கும் சித்திக்கும் எனக் கருதி, முதலில் ஆத்மா ஸமஸ்தஜகத்திற்கும் அதிஷ்டானமாக இருப்பதால் அதுவே ஈச்வரஸ்வரூபம் என்பதை விளக்கிக் கூறி தென் திசை நோக்கி வீற்றிருக்கும் பரமேச்வரனை (தக்ஷிணமூர்த்தியை) "விச்வம்" என்ற சுலோகத்தால் துதிக்கிருர்.

விளக்கம்: ஸ்ரீ பரமேச்வரனே லோகாநுக்கிரஹத்திற்காக ஆதிசங்கர பகவத்பாதாசார்யாளாக அவதரித்தார். அவர்கள் இச்சிறிய ஸ்தோத்ரத்தில் உபனிஷத்துக்களின் பொருள்களையெல்லாம் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளார்கள். இதை இந்த உரையாசிரியர் அழகாக வர்ணித்திருக்கிருர். எல்லா உபனிடதங்களே பாற்கடலாம். நியாயங்களை விளக்கும் பிருஹ்ம ஸூத்ரங்களே அதைக் கடையும் மந்தரமலையாம். சூத்திரங்களால் செய்யப்படும் விசாரமே கடைதலாம். அதிலிருந்து தோன்றியதாம் "அத்வைதம்" என்ற

அமிருதம். அந்த அமிருதத்தை இச்சிறு ஸ்தோத்ரம் என்ற குடத்தில்தான் வைத்திருக்கின்றாராம்.

இதில் ஜீவன், ஜகத், ஈச்வரன், குரு என்ற இந்நால்வருக்கும் அபேதம் போதிக்கப்படுகிறது. இதுதான் அத்வைதம். சுகதுக்கங்களை அநுபவிப்பவன் ஜீவன். அநுபவிக்கப்படுவது-சுகதுக்கமயமான ஜகத். சுகதுக்க அநுபவத்தை அளிப்பவர் - ஈச்வரன். மோக்ஷத்தை உபதேசித்து அதை அளிப்பவர் குரு.

ஒவ்வொரு கிரந்தத்திற்கும் ஆரம்பத்தில் விஷயம் பிரயோஜனம், சம்பந்தம், அதிகாரி என்ற நான்கும் எடுத்துரைக்கப்படவேண்டும். இதற்கு "அநுபந்த சதுஷ்டயம்" எனப் பெயர். இவையில்லாத நூல் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. இந்த நூல் உபனிஷத் ஸாரமானதால் அதற்குள்ள அநுபந்தசதுஷ்டயமே இதற்கும் எனக்கருதி இங்கு அதைத் தனியாகக் கூறவில்லை.

"விச்வம்" என்று ஆரம்பமாகும் இந்த முதல் ஸ்தோத்ரத்தில் ஆத்மஸ்வரூபமும் ஈச்வரனும் ஒன்றே என்பதை நிரூபணம் செய்கின்றார்.

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यः साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

विश्वं - विविधप्रत्ययगम्यं वियदादि सर्वमिदं जगत्. निजान्तर्गतं - निजं - स्वीयं, अन्तः - मध्यं, गतं - प्राप्तं प्रत्यक्स्वरूपे स्थितमिति यावत् ।

निर्विकारे नीरन्ध्रेऽतिस्वच्छेऽसङ्गे सूक्ष्मे प्रतीचि जगतस्तद्वि परीतस्य स्थितौ तत्सदृशं दृष्टान्त माह दर्पणदृश्यमाननगरीतुल्यमिति दर्पणे-आदर्शे, नीरन्ध्रे असङ्गेस्वच्छे सूक्ष्म निर्विकारे प्रतिबिम्बिता सती, दृश्यमाना - अवलोक्यमाना या, नगरी पुरी, चतुर्दश सन्निवेशा सप्तवापीयुक्ता नानोपवना दक्षिणोत्तरतोऽतिमनोहर-मार्गद्वयविराजिता अनेकक्रीडाशिखरियुता नानाविधजनसंकुला क्वचित् कष्टमार्गप्रदेशयुता च, तत्तुल्यं - तत्समानम् ।

பலவிதமான அறிவில் தோன்றும் ஆகாயம் முதலிய இந்த உலகம் முழுவதும் தனக்குள்ளேயே இருக்கிறது. எல்லா உலகமும் ஆத்மஸ்வரூபத்திலேயே இருக்கின்றது என்றபடி.

விகாரமற்றதும், இடைவெளியில்லாததும், மிக ஸ்வச்சமாயும், சூக்ஷ்மமாயுமுள்ள ஆத்மஸ்வரூபத்தில் அதற்கு மாருன இவ்வுலகம் இருக்கலாம் என்பதற்கு சரியான திருஷ்டாந்தம் ஒன்றை—'தர்ப்பண தருச்யமாந நகரீதுல்யம்'—என்பதால் கூறுகிருர். இடைவெளியற்றதும் எந்த வஸ்துவுடனும் சம்பந்தப்படாததும், ஸ்வச்சமாயும், சூக்ஷ்மமாயும், விகாரமற்றதுமான கண்ணுடியில் பிரதிபிம்பிக்கின்ற இவ்வுலகம் நம்மால் பார்க்கப்படுவது போல் இப்பிரபஞ்சமும் ஆத்மாவில் தோன்றுகிறது. அவ்வுலகமும் (பதினுன்கு லோகங்களாகிற) பதினுன்கு அமைப்புகளுடன் கூடியதும், (ஏழு சமுத்திரங்களாகிற) ஏழு நீர்நிலேயங்களுள்ளதும், பலவித காடுகளேக் கொண்டதும், தெற்கிலும் வடக்கிலும் (அர்ச்சிராதி மார்க்கம், தூமாதி மார்க்கம்) என்ற இரு அழகிய வழிகளால் அலங்கரிக்கப்பெற்றதும் (சந்திரன், சூரியன்) என்ற இரு மங்கள தீபங்களால் விளங்குவதும், பல மலேகளேக்கொண்டதும், பலவிதஜன நெருக்கமுள்ளதும்,

சிலவிடங்களில் துன்பங்களை விளைவிக்கும் மார்க்கமுள்ள பிரதேசத்துடன் (நரகத்துடன்) கூடியதுமாக இருக்கின்றது.

तदुक्तं भारतीतीर्थैः—

"निश्छिद्रदर्पणे भाति वस्तुगर्भं बृहत् वियत् ।
सच्चित्सुखे तथा नाना जगद् गर्भमिदं वियत् ॥

(पञ्चदशी 13-101)

वासिष्ठेपि शिलोपाख्याने इदमुक्तम् —

"द्यौः क्षमा वायुराकाशः पर्वतास्सरितो दिशः ।
सन्ति तस्यां शिला साच सुषिरा न मनागपि ॥

अप्यत्यन्तघनाङ्गायास्सुनीरन्ध्राकृतेरपि ।
विद्यतेन्तर्जगद्बृन्दं व्योम्नीव विततोऽनिलः ॥ इति

निर्वाणप्रकरणे 46 तमे अध्याये)

ஸ்ரீ பாரதீ தீர்த்த ஸ்வாமிகளாலும் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது.

இடைவெளியற்ற கண்ணாடியில் பலவஸ்துக்களுடன் கூடிய மிகப் பெரிய இந்த ஆகாயம் எப்படித் தோன்றுகிறதோ, அவ்விதமே ஸச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவில் பற்பல ஜங்கமஸ்தாவரங்களுடன் கூடிய இந்த ஆகாயம் பிரகாசிக்கின்றது.

யோகவாஸிஷ்டத்திலும் சிலோபாக்யானத்தில் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது.

"தேவலோகம், பூமி, வாயு, ஆகாயம், மலைகள், நதிகள், திக்குகள் எல்லாம் அந்த கற்பாறைக்குள் இருக்கின்றன. அந்தப் பாறையோ கொஞ்சங்கூட இடைவெளியுள்ளதாக இல்லை."

"இப்பாறை மிகக் கடினமாக இருந்தபோதிலும் சொல்ப த்வாரங்கூட இல்லாததாக இருந்தபோதிலும் ஆகாயத்தில் காற்று பரவி இருப்பதுபோல் எல்லா உலகங்களும் இதற்குள் அடங்கி இருக்கின்றன."

மேற்படி கிரந்தத்தில் இந்தப் பிரகரணத்தில் சித்ஸ்வரூபமே கற்பாறையாக நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.

**ननु प्रतीचोऽन्तरे यदि सदा विश्वं तिष्ठति, तर्हि रागादिवदन्तरेवानुभूयेतेत्याशङ्क्याह - आत्मनीत्यादिना ।** आत्मनि-**स्वप्रकाशे प्रतीचि विषये आश्रये च,** माया-अविद्या, **सूर्ये पेचकादीनामन्धकारप्रतीतिवन्मामहं न जानामीति भ्रमानुभवसिद्धा, तया मायया,** बहिः-**स्वस्माद् बाह्यदेशे** उद्भूतमिव पश्यन्-**अवलोकयन् यः इत्युत्तरत्रसंबन्धः ।**

ஆத்ம ஸ்வரூபத்திற்குள்ளேயே எப்பொழுதும் எல்லா உலகங்களும் இருக்கின்றனவென்றால் மனத்திலிருக்கும் ராகம் (ஆசை), த்வேஷம் முதலிய குணங்களைப் போல் இவ்வுலகங்களும் உள்ளே இருப்பதாகவல்லவோ அநுபவிக்கப்படவேண்டும்? அப்படி அநுபவிக்கப்படவில்லையே என்ற சந்தேஹத்திற்கு – ஆத்மநி – முதலிய சொற்களால் ஸமாதானத்தைக் கூறுகிறார். ஸ்வப்ரகாசமான ஆத்மஸ்வரூபத்தை ஆச்ரயித்தும், அதையே விஷயமாகக்கொண்டுமிருக்கின்றது மாயை. (மாயை, அவித்யை, அஜ்ஞானம் என்பதெல்லாம் ஒன்றே.) சூரியன் பிரகாசித்துக்கொண்டிருக்கும்போதே கோட்டானுக்கு இருள் தோன்றுகிறது. அதுபோல் பிரகாச ஸ்வரூபமான ஆத்மாவை இருள்போன்ற அஜ்ஞானம் விஷயமாகக் கொள்ளலாம். "நான் என்னை அறிய

வில்லை” என்று அநுபவமிருப்பதால் அஜ்ஞானத்திற்கு ஆச்ரயம், விஷயம் இரண்டும் ஆத்மாதான் என்றும் ஏற்படுகிறது.

விளக்கம்: ஆத்மா ஒன்ருனதால் அஜ்ஞானத்திற்கு விஷயம் வேறு, ஆச்ரயம் வேறு என்று சொல்லுவதற்கில்லை. ஆதலால்தான்

“आश्रयत्वविषयत्वभागिनी निर्विभागचितिरेव केवला”

“பேதமற்ற சுத்த சைதன்யமே அஜ்ஞானத்திற்கு ஆச்ரயமாயும் விஷயமாயுமிருக்கின்றது” என்று ஸம்க்ஷேபசாரீரகத்திலும் கூறப்பட்டுள்ளது. அப்படிப் பட்ட மாயையால் தன்னைக்காட்டிலும் வெளியில் ஆவிர்ப் பவித்ததுபோல் இருக்கின்ற இந்த உலகங்களை பார்க் கிறவன் எவனோ “பச்யந்” என்ற பதத்திற்கு மேலே மூன்ரும் பாதத்திலுள்ள “ய:” என்ற பதத்தோடு சம்பந்தம்.

अन्तर्विद्यमानस्य जगतो बाह्यत्वेनानुभवे दृष्टान्तमाह - यथा निद्रयेति - यथा निद्रया स्वाप्नं जगत् साक्षिणि स्वस्मिन्नध्यस्ततया स्थितमपि स्वस्माद् बहिरवस्थितमिवानुभवति, तद्वदेवेमं जाग्रत्प्रपञ्चमपि स्वस्मिन् प्रत्यक्चैतन्ये अध्यस्ततया स्थितमेव स्वाध्यस्तदेहादितादात्म्याध्यासवशात् स्वस्माद् बहिरिव पश्यति। अन्यथा जडस्य जगतः प्रत्यक्चैतन्येन सह संयोगाद्यन्यतमसंबन्धासंभवेन प्रतीचस्सकाशात् जगद्भानं न स्यात्। तथा च तदध्यस्तमेव तत्।

யதா—நித்ரயா— என்புதால் உள்ளே இருக்கும் ஜகத் வெளியில் இருப்பதாக அநுபவிக்கப்படுவதற்கு திருஷ்டாந்தத்தைக் கூறுகிருர். ஸ்வப்ந காலத்தில்

தோன்றும் ஜகத் ஸாக்ஷிஸ்வரூப ஆத்மாவில் அத்யஸ்தமாக இருந்தபோதிலும், தன்னைக்காட்டிலும் வெளியில் இருப்பதுபோல் எவ்விதம் அநுபவிக்கப்படுகின்றதோ, அதுபோல் ஜாக்ரத்காலத்தில் தன்ஸ்வரூபத்தில் அத்யஸ்தமான பிரபஞ்சத்தை வெளியில் இருப்பதுபோல் பார்க்கின்றான். ஜகத்திற்கு ஆத்மஸ்வரூபத்தில் அத்யாஸம் என்று சொல்லாதவரை அதற்கு பிரகாசம் என்பதே ஏற்படாது. உலகில் ஆத்மாஒன்றே ஸ்வயமாக பிரகாசிக்கும் வஸ்து. மற்றவைகள் அதன் சம்பந்தத்தால் பிரகாசிக்க வேண்டும். அஸங்கனான ஆத்மாவுடன் ஜகத்திற்கு ஸம்யோகம், ஸமவாயம் முதலிய ஸம்பந்தங்கள் ஸம்பவிக்காதாகையால் அத்யாஸம் என்றே சொல்ல வேண்டும். அப்படி இல்லையேல் ஜடமான ஜகத்திற்கு ஆத்மாவினால் பிரகாசமே இல்லாமல் போய்விடும். ஆதலால் ஜகத் ஆத்மாவில் அத்யஸ்தம் என்றே ஏற்படுகிறது.

விளக்கம்: அஜ்ஞானத்தால் ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாகப் பார்த்தல் "அத்யாஸம்" எனப்படும். கிளிஞ்சலை வெள்ளியென்று நினைப்பது, பழுதையைப் பாம்பு என்று நினைப்பது முதலியவை இதற்கு உதாரணம். இதுபோல் தான் ஆத்மஸ்வரூபத்தில் அனாத்மாவாகிய இந்த ஜகத் தோன்றுகிறது. ஸ்வப்நத்தில் பல விஷயங்களைப் பார்ப்பதும் கேட்பதும் அத்யாஸத்தால்தான் என்பதில் ஐயமில்லை. அதுபோல்தான் ஜாக்ரத்திலும் என்று இங்கு கூறப்பட்டுள்ளது. அத்யாஸவசத்தால் தோன்றும் வஸ்து கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல் மித்யை. இங்கு ஆத்மாவில் ஜகத் அத்யஸ்தம் என்பதால் ஜகத் மித்யை என்று சித்திக்கின்றது. ஆதலால் இந்த சுலோகத்தில் ஆத்மஸ்வரூபத்தில் ஜகத் இருக்கின்றது என்பதற்கு அதில் அத்யஸ்தம் என்று பொருள் கொள்ளவேண்டும்.

तथा च प्रत्यगात्मानं प्रकृत्य श्रुतिर्भवति

(1) "पुरत्रये क्रीडति यश्च जीवस्ततस्तु जातं सकलं विचित्रम् ।
आधारमानन्दमखण्डबोधं यस्मिन् लयं याति पुरत्रयं च ॥

(2) एतस्माज्जायते प्राणः मनस्सर्वेन्द्रियाणि च ।
खं वायुर्ज्योतिरापः पृथिवी विश्वस्य धारिणी ॥

(3) मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।
मयि सर्वं लयं याति तद् ब्रह्माद्वयमस्म्यहम् ॥ इति
(कैवल्योपनिषत् 1-14, 15, 19).

(4) "यथा स्वप्न प्रपञ्चोयं मयि मायाविजृम्भितः ।
एवं जाग्रत्प्रपञ्चश्च मयि मायाविजृम्भितः ॥

इति पुराणवचनं च । ततः प्रतीच्येव जाग्रत्प्रपञ्चोऽध्यस्तोनु भूयते भ्रान्त्या बहिरिवेति भावः ।

ஜீவாத்மஸ்வரூபத்தைக் கூறத்தொடங்கிய சுருதியும் இவ்வாறே அமைந்திருக்கிறது.

(1) எந்த ஜீவன் (உண்மையில்) எல்லா ஜகத்திற்கும் ஆதாரமாயும், ஆனந்தவடிவமாயும், பேதமற்ற அறிவு உருவமாயுமிருக்கின்றானோ, எவன் ஜாக்ரத்–ஸ்வப்ந–ஸுஷுப்திகாலங்களில் ஸ்தூல–சூக்ஷ்ம–காரண சரீரங்களில் கிரீடிக்கின்றானோ, எவனிடத்தில் முப்புரங்களும் (ஸ்தூல-சூக்ஷ்ம–காரணசரீரங்கள்) லயமடைகின்றனவோ, அவனிடமிருந்தே விசித்ரமான இவ்வுலகங்கள் எல்லாம் உண்டாயிருக்கின்றன.

(2) இவனிடமிருந்தே பிராணன், மனது, மற்ற எல்லா இந்திரியங்கள், ஆகாயம், வாயு, அக்நி, ஜலம், எல்லாவற்றையும் தரிக்கும் பூமி இவையெல்லாம் உண்டாகின்றன.

(3) என்னிடமிருந்தே எல்லாம் உண்டாயின. என்னிடமே எல்லாம் நிலைபெற்றிருக்கின்றன. இறுதியில் எல்லாம் என்னிடமே லயத்தையுமடைகின்றன. அப்படிபட்ட அத்விதீய பிருஹ்மஸ்வரூபமாகவே நான் இருக்கின்றேன்.

(4) இந்த ஸ்வப்நப்பிரபஞ்சம் எவ்விதம் என்னிடம் மாயையால் தோன்றுகின்றதோ, அவ்விதமே ஜாக்ரத் பிரபஞ்சமும் என்னிடத்திலேயே மாயையால் தோன்றுகின்றது என்று புராணவசனம்.

ஆதலால் ஆத்மஸ்வரூபத்திலேயே ஜாக்ரத் பிரபஞ்சம் அத்யஸ்தமாக இருந்தாலும் பிராந்தியால் வெளியில் இருப்பதுபோல் அநுபவிக்கப்படுகின்றது என்பது கருத்து.

**ननु स्वात्मनि प्रपञ्चः अध्यस्तश्चेद् बाध्येत, न च कदाचिद् बाधोऽनुभूयते ; अतो नात्मन्यध्यस्तः, किन्तु बहिः परमार्थत एव स विद्यते इत्याशङ्क्य, यथा स्वप्नप्रपञ्चोऽध्यस्तोपि तदा सत्य इव भाति प्रबोधसमये बाध्यते, तथैवायमपि जाग्रत्प्रपञ्चः तत्त्वज्ञानात् पूर्वं सत्यत्वेन भातोप्याचार्येण परमदयालुना साक्षात्परमेश्वरावतार रूपेण उपदिष्टतत्त्वमस्यादिमहावाक्यजन्यप्रत्यग्ब्रह्मैक्य साक्षात्कार समये समूलं बाधितः सन् प्रत्यगभिन्नाद्वितीय ब्रह्ममात्रतया परिशिष्यते इत्यभिप्रेत्याह**-यस्साक्षादित्यादिना ।

" பிரபஞ்சம் ஆத்மஸ்வரூபத்தில் அத்யஸ்தம் என்ருல் அதற்கு பாதம் (நாசம்) ஏற்பட்டே தீரும். பிரபஞ்ச நாசம் நம்மால் ஒருபொழுதும் அநுபவிக்கப்படவில்லை. ஆதலால் பிரபஞ்சம் ஆத்மாவில் அத்யஸ்தமல்ல. ஆத்மாவிற்கு வெளியில் உண்மையாக அது இருக்கின்றது " என்று ஆசங்கை செய்துகொண்டு (அதற்கு) " எவ்விதம் ஸ்வப்நப்ரபஞ்சம் அத்யஸ்தமாக

இருந்தாலும், அக்காலத்தில் ஸத்யம்போல் பிரகாசிக்கின்றதோ, விழித்துக்கொண்டதும் நாசமடைகின்றதோ அவ்விதமே இந்த ஜாக்ரத் பிரபஞ்சமும் தத்வஞானம் ஏற்படுவதற்குமுன் ஸத்யமாகப் பிரகாசித்தாலும் பரம தயாளுவாயும், ஸாக்ஷாத் பரமேச்வரனுடைய அவதாரமாயுமிருக்கின்ற ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட "தத்வமஸி" முதலிய மஹாவாக்கியங்களிலிருந்து உண்டான ஜீவப்ருஹ்மைக்ய ஸாக்ஷாத்கார சமயத்தில் பிரபஞ்சத்திற்குக் காரணமான அவித்யையுடன் கூட பிரபஞ்சம் நாசமடையுமானதால், ஜீவாபிந்நாத்விதீய ப்ருஹ்மம் மட்டுமே மிஞ்சிநிற்கும்" என்ற ஸமாதானத்தை மனத்தில் வைத்துக்கொண்டு அதை—யஸ்ஸாக்ஷாத்— முதலிய சொற்களால் விளக்குகிறார்.

விளக்கம்: பிரபஞ்சம் அத்யஸ்தமென்றால் அதன் நாசம் இப்பொழுதே நம்மால் அநுபவிக்கப்படவேண்டும். அவ்விதம் அநுபவிக்கப்படவில்லையாதலால் அது ஸத்யம் (உண்மை) என்று சங்கையின் தாத்பர்யம். ஆத்ம ஞானம் ஏற்படுவதற்குமுன் இந்தப் பிரபஞ்சநாசம் அநுபவிக்கப்படாதபோனாலும் எவ்விதம் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவுடன் ஸ்வப்நத்தில் கண்ட பொருள்கள் தோன்றுவதில்லையோ, அதுபோல் அத்விதீய ஆத்ம ஸாக்ஷாத்காரம் (ஞானம்) என்ற விழிப்பேற்பட்டவுடன் இப்பிரபஞ்சத்தின் தோற்றமும் அகன்றுவிடும் என்று ஸமாதானத்தின் தாத்பர்யம்.

यः - अध्यस्तप्रपञ्चाधिष्ठानभूतः प्रत्यगात्मा, प्रबोधसमये - गुरूपदिष्टमहावाक्यात् ज्ञानोत्पत्तिकाले, अद्वयं - सर्वप्रपञ्चस्य समूलस्य बाधितत्वेन वियदादिद्वयरहितं, स्वात्मानमेव - वियदाद्यधिष्ठानभूतब्रह्माभिन्नसच्चिदानन्दात्मकं प्रत्यञ्चमेव, साक्षात्कुरुते - सच्चिदानन्दात्मकं ब्रह्माहमस्मीत्यप्रतिबन्धेनाव्यवधानमनुभवति-

"यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् तत्केन कं पश्येत्" इत्यादिश्रुतेः।
तस्मै - उक्तरूपाय, श्रीगुरुमूर्तये - श्रीगुरुः - साक्षात्कृतब्रह्मतत्त्वतया विविधपरिच्छेदशून्यो ज्ञानोपदेष्टा पुरुषः, तन्मूर्तये - तद्रूपेणावस्थिताय, श्रीदक्षिणामूर्तये - दक्षिणा - दक्षिणदिगभिमुखा, मूर्तिः, विग्रहः, यस्य तस्मै।

—யः—அத்யஸ்தமான பிரபஞ்சத்திற்கு அதிஷ்டான மாகவிருக்கும் எந்த ஜீவாத்மா, (கிளிஞ்சலைப் பார்த்து வெள்ளி என்று நினைக்கும் போது வெள்ளிக்குக் கிளிஞ்சல் அதிஷ்டானமாகும். அதுபோல் பிரபஞ்சாத்யாஸத்திற்கு அதிஷ்டானம் ஆத்மா)-ப்ரபோதஸமயே—ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட மஹாவாக்கியத்திலிருந்து ஞானம் ஏற்படுங்காலத்தில், —அத்வயம்—பிரபஞ்சத்திற்குக் காரணமான அவித்யையுடன் கூட ஸமஸ்தப்பிரபஞ்சமும் நாசமடைந்துவிட்டதால், ஆகாயம் முதலிய இரண்டாவது வஸ்து அற்றதான,—ஸ்வாத்மாநமேவ—ஆகாயம் முதலியவைகளுக்கு அதிஷ்டாநமாயிருக்கும் பிருஹ்மத்தைக் காட்டிலும் பேதமற்ற, ஸச்சிதானந்த வடிவமான ஆத்மஸ்வரூபத்தையே —ஸாக்ஷாத்குருதே—ஸச்சிதானந்த வடிவமான "பிருஹ்மஸ்வரூபமாகவே நான் இருக்கிறேன்" என்று எவ்வித பிரதிபந்தகமுமன்னியில் நேரில் அநுபவிக்கிறானோ, "எந்த காலத்தில் (ஆத்ம ஞானம் உண்டாகுங் காலத்தில்) இவனுக்கு (ஞானிக்கு) எல்லாம் ஆத்மாவாகவே ஆகிவிட்டதோ, அப்பொழுது இவன் எதனால் எதைப் பார்ப்பான்? என்று சுருதி இருப்பதால் (மேற்கூறியபடி ஏற்படக்கூடும் என சித்திக்கின்றது) —தஸ்மை—அப்படிப்பட்ட—ஸ்ரீ குருமூர்த்தயே—ஸ்ரீ குரு: —பிருஹ்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்துவிட்டதால் கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்துபரிச்சேதம் என்ற மூவகைப் பரிச்சேதங்களுமற்று ஞானோபதேசம் செய்யும்

புருஷன்—தந்மூர்தயே—அவ்வித குருஸ்வரூபமாக விருக்கின்ற, —ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே—தென்திசை நோக்கி வீற்றிருக்கும் உடலையுடையவரின் பொருட்டு.

விளக்கம்: உலகிலுள்ள எல்லா பாதார்த்தங்களிலும் காலம், தேசம், வஸ்து என்ற மூன்றினாலும் "பரிச்சேதம்" என்பதுண்டு.

"பரிச்சேதம்" என்ற ஸம்ஸ்கிருத சொல்லிற்கு பிரிவு என்றோ அல்லது அளவு என்றோ ஒருவாறு பொருள் கூறலாம். உதாரணமாக இப்பொழுது செய்யப்பட்ட ஒரு நகை நேற்று இல்லையாதலால் அதில் காலபரிச்சேதமும், கழுத்தில் உள்ள அதே நகை, கை, கால் முதலிய மற்றவிடங்களில் இல்லாததால், அதில் தேச பரிச்சேதமும், அதே நகை வஸ்திரம் என்ற வேறு வஸ்துவாக இல்லாததால் அதில் வஸ்துபரிச்சேதமும் இருக்கின்றது எனக் கூறலாம். பிருஹ்மஸ்வரூபம் எல்லாவிடங்களிலும், எக்காலத்திலும், எல்லாவஸ்துவாகவுமிருக்கின்றபடியால் மூவித பரிச்சேதங்களுமற்றது எனக் கூறப்படும். பிருஹ்மஸாக்ஷாத்காரம் செய்த புருஷனும் பிருஹ்மமாக ஆகிவிட்டபடியால் மூவித பரிச்சேதங்களுமற்றவனாக ஆகிவிடுகிறான்.

"परमाद्वैतविज्ञानं कृपया वै ददाति यः ।
सोयं गुरुर्गुरुस्साक्षात् शिव एव न संशयः" ॥

इत्यादिवचनशतेभ्यो ज्ञानोपदेष्टा गुरुस्साक्षात्परमेश्वर एव । अथवा - श्रीमती - सच्चिदानन्दात्मिका, गुर्वी-अतिमहत्तरा, मूर्तिः - स्वरूपं यस्य सः, तथा, तस्मै श्रीगुरुमूर्तये ॥

श्रिया - अनाद्यचिन्त्यमायाशक्त्या, दक्षिणः - सृष्टिस्थित्यन्तविरचनानिपुणश्चासौ, परमार्थतोऽमूर्तिश्च - आकारविशेषरहितः,

"असथूलमनणु" इत्यादिश्रुतेः। सः - दक्षिणमूर्तिः, तस्मै "इदं नमः" - प्रह्वीभावः, अस्त्विति शेषः। प्रह्वीभावश्च, स्वात्मनः परमेश्वरे एकत्वेन समर्पणम्।

"யார் கருணைபுரிந்து மிகச்சிறந்த அத்வைத ஞானத்தை அளிக்கின்றாரோ, அவரே குரு. அந்த குருவும் ஸாக்ஷாத் சிவஸ்வரூபமே. இதில் ஸந்தேகமில்லை" என்றெல்லாமுள்ள பல வசனங்களால் ஞானோபதேசம் செய்யும் குரு ஸாக்ஷாத் பரமேச்வரன் என்றே ஏற்படுகிறது.

ஸ்ரீ குருமூர்த்தயே என்ற பதத்திற்கு "ஸ்ரீமதீ—குர்வீ—மூர்த்தி: – யஸ்ய" என்று விக்ரஹம் செய்து அதனால் கிடைக்கும் பொருள் பின்வருமாறு :

ஸச்சிதானந்தவடிவமாயும், ஆதலால் மிகப் பெருமை வாய்ந்ததாயுமுள்ள உருவத்தை உடையவர் யாரோ அவர்தான் "ஸ்ரீ குருமூர்த்தி" எனப்படுவார்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே — என்ற சொல்லிற்கும், "ஸ்ரீயா + தக்ஷிண: – ஸ்ரீ தக்ஷிண:, ஸ சாஸௌ + அமூர்த்தி: ச."—என்ற விக்ரஹப்படி கிடைக்கும் பொருள் வருமாறு :— அநாதியாயும், நம்மால் சிந்தனை செய்யக் கூட முடியாததுமான மாயாசக்தியால் உலகைப் படைத்தல், இரட்சித்தல், அழித்தல், இவற்றைச் செய்வதில் திறமையுள்ளவராயும், உண்மையில் "அஸ்தூலமநணு" (ஸ்தூல சூக்ஷ்ம ஸ்வரூபமற்றது) முதலிய சுருதிப்படி உருவமற்றவராயுமிருப்பவர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி எனப்படுவார். அவர்பொருட்டு, இதம்நம:—வணக்கம்—அஸ்து—இருக்கட்டும் 'அஸ்து' என்ற சொல் சுலோகத்தில் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்.

இங்கு "வணக்கம்" என்பது ஜீவாத்மாவை பரமாத்வாவிடம் ஒன்றாக அர்ப்பணம் செய்வதுதான்.

**अत्र च पूर्वार्धेन त्वंपदार्थ उक्तः, उत्तरार्धे "श्री गुरुमूर्तये श्री दक्षिणामूर्तये" इति पदद्वयेन मूर्तिद्वययुक्तस्तत्पदार्थ उक्तः । "स्वात्मानमद्वयं" इति पदद्वयसामानाधिकरण्येन यत्तच्छब्दाभ्यां च प्रत्यक् ब्रह्मैक्यलक्षणो वाक्यार्थ उक्तः । सकलवेदान्तप्रसिद्धोऽयमेवार्थः उत्तरश्लोकैः प्रपञ्च्यते ॥**

இந்த சுலோகத்தில் பூர்வார்த்தத்தினால் "த்வம் பதார்த்தம்" கூறப்பட்டுள்ளது. உத்தரார்த்தத்திலுள்ள "ஸ்ரீ குருமூர்த்தயே" "ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே" என்ற இரண்டு பதங்களாலும் "குரு, ஈச்வரன்" என்ற இருஸ்வரூபமாயுள்ள "தத் பதார்த்தம்" உரைக்கப் பட்டுள்ளது. "ஸ்வாத்மாநம், அத்வயம்" என்ற ஒரே வேற்றுமையிலுள்ள இருபதங்களாலும், "ய:, தஸ்மை" என்ற யச்சப்த, தச்சப்தங்களாலும் ஜீவபிருஹ்ம ஐக்ய மாகிற மஹாவாக்யார்த்தம் கூறப்பட்டுள்ளது. எல்லா உபனிஷத்துக்களிலும் பிரசித்தமான இதே விஷயந்தான் மேலுள்ள சுலோகங்களால் விவரிக்கப்படுகிறது.

**दर्पणदृश्यमाननगरीतुल्यं, निजान्तर्गतं, विश्वं यथा निद्रया, तथा आत्मनि मायया बहिरुद्भूतमिव पश्यन्, यः प्रबोधसमये अद्वयं स्वात्मानमेव साक्षात्कुरुते तस्मै श्रीगुरुमूर्तये इदं नमः इत्यन्वयः ।**

கண்ணாடியில் காணப்படும் நகரத்திற்கு ஒப்பாக தனக்குள்ளேயே இருக்கின்ற இவ்வுலகை, தூக்கத்தால் எவ்விதம் (தனக்குள்ளேயே இருக்கும் ஸ்வப்நப்பிரபஞ்சத்தை வெளியிலிருப்பதாக) பார்க்கின்றானோ, அதுபோல் ஆத்மாவை ஆச்ரயித்ததாயும் விஷயீகரிப்பதுமான

மாயையால் வெளியில் இருப்பதுபோல் பார்க்கின்ற எவன், ஆத்மஞானம் ஏற்படுங்காலத்தில் இரண்டற்ற தன் ஆத்மஸ்வரூபத்தையே ஸாக்ஷாத்காரம் செய்கின்ருனோ, அப்படிப்பட்ட ஸ்ரீ குருமூர்த்தியான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் பொருட்டு நமஸ்காரம் என்று அந்வயம்.

एवमेवास्यार्थो वार्तिककारेण संगृह्योक्तः —

" ईश्वरो गुरुरात्मेति मूर्तिभेदाद्विभागिने ।
व्योमवद् व्याप्तदेहाय दक्षिणामूर्तये नमः ॥ इति

வார்த்திககாரரால் இந்த சுலோகத்திற்கு இவ்விதமாகவே அர்த்தம் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. "ஈச்வரன், குரு, ஆத்மா, என்ற மூர்த்தி (சரீரம்) பேதத்தால்மட்டும் பேதத்தையடைந்த (உண்மையில்) ஆகாயம் போல் எங்கும் வியாபித்த ஸ்வரூபத்தையுடைய தக்ஷிணாமூர்த்தியின்பொருட்டு நமஸ்காரம்.

விளக்கம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யர் அவர்களால் இந்த ஸ்தோத்திரத்திற்கு ஓர் உரை எழுதப்பட்டிருக்கிறது. அதற்கு "மாநஸோல்லாஸம்" என்று பெயர். அது முழுவதும் சுலோகமாகவுள்ளது. அது "வார்த்திகம்" என்ற வியாக்யான முறையைத் தழுவியது. மூலத்தில் கூறியதை விளக்குவது, அவசியமாயின் மூலத்தில் இல்லாததையும் எடுத்துரைப்பது, தவறி சொல்லப்பட்டிருப்பதுபோல் காணப்படுவதை தெளிவுபடுத்துவது முதலியன வார்த்திகத்தின் இலக்ஷணம். அந்த உரையாசிரியரையே இங்கு "வார்த்திககாரர்" எனக் குறிப்பிடுகிருர். (1)

---

नन्वात्मनि प्रपञ्चस्यावस्थानं नोपपद्यते, तदकारणत्वात् । तथाहि किमात्मा जगदारम्भकः ? । उत तदाकारपरिणामी ? ।

नाद्यः; -एकस्य विभोश्चिद्रूपस्य जडप्रपञ्चारम्भकत्वासंभवात्।
ततो नित्याश्चतुर्विधाः परमाणवो जगदारम्भका इति।

பிரபஞ்சத்திற்கு ஆத்மா காரணமாக இராததால் ஆத்மாவில் பிரபஞ்சம் இருக்கின்றது என்பது பொருத்தமல்ல. (காரணத்தில் தான் கார்யம் இருக்கக்கூடும். பிரபஞ்சத்திற்கு ஆத்மா ஏன் காரணமல்ல என்பதை "ததாஹி" என்பது முதல் விளக்குகிருர்.) ஆத்மா ஜகத்தை ஆரம்பிக்கின்றதா? அல்லது ஜகத்தாக பரிணமமடைகின்றதா? (அதாவது ஆத்மா ஆரம்ப காரணமா? பரிணமகாரணமா?) ஒன்ருயும், எல்லாவிடங்களிலும் வியாபித்ததாயும் (விபு) சித்ரூபமாயுமுள்ள ஆத்மா, ஜடமான பிரபஞ்சத்தை ஆரம்பிக்க முடியாதாகையால் முதலாவதாகக் கூறப்பட்ட "ஆத்மா ஜகத்தை ஆரம்பிக்கின்றது" என்பதில்லை. அவயவங்களற்றதும், விகாரமற்றதும், சித்ஸ்வரூபமாயுமுள்ள ஆத்மா மாறுதலடைய முடியாதாகையால் இரண்டாவதாகக் கூறப்பட்ட "ஆத்மா ஜகத்ரூபமாக பரிணமமடைகின்றது" என்பதுமில்லை. ஆதலால் நித்யமான பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு இவற்றின் பரமாணுக்களே ஜகத்தை ஆரம்பிக்கின்றன. ஆகவே அவற்றிலேயே பிரபஞ்சம் இருக்கின்றது. (இது நையாயிகர்களுடைய கொள்கை.)

यद्वा-प्रधानमेव जडं त्रिगुणात्मकं जगदाकारपरिणामि, तत्रैवेदं जगत् परमार्थतोऽस्ति, न तु चिदात्मनि इति नैय्यायिकानां सांख्यानां वा मतमाशङ्क्य—न तावत्परमाण्वारम्भवाद उपपद्यते।

(1) निरवयवानां तेषां सर्वात्मना संयोगे प्रथिमानुपपत्तेः,
(2) भिन्नयोर्हिमविन्ध्यवत् कार्यकारणभावायोगात्,
(3) पूर्वमसतश्च कार्यस्य शशविषाणवदुत्पत्त्यनुपपत्तेः.

(4) अत्यन्तभिन्नकार्यारम्भे कार्ये गुरुत्वादितद्वैगुण्यापत्तेः,

(5) परमाणुसद्भावे च प्रमाणाभावात् ,

(6) कार्यद्रव्यस्य स्वन्यूनपरिमाणारब्धत्वनियमस्य स्थूलतूलपिण्डारब्धतन्त्वादावदर्शनाच्च ॥

அல்லது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குண மயமான, ஜடமான, "பிரதானம்" என்ற வஸ்துவே ஜகத்தாக மாறுதலடைகிறது. அதிலேயே உண்மை யாக இந்த ஜகத் இருக்கின்றது. சித்ரூபமான ஆத்மாவில் இல்லை. (என்பது ஸாங்கியர்களுடைய கொள்கை) இவ்வாறுள்ள நையாயிகர்களுடையவோ, அல்லது ஸாங்கியர்களுடையவோ கொள்கையே சரியாக இருக்கலாகாதா? என சங்கித்து (அதற்கு சமாதானம்) கூறுகிறார்.

"பரமாணுக்களே உலகத்தை ஆரம்பிக்கின்றன" என்ற ஆரம்பவாதம் அடியிற்கண்ட காரணங்களால் சரியல்ல.

1. பரமாணுக்களுக்கு அவயவங்கள் கிடையா. ஆதலால் அவை எவ்வளவு சேர்ந்து ஒரு வஸ்துவை ஆரம்பித்தாலும் அந்த வஸ்து பரமாணுக்களைவிட பெரிதாக இராது. அவயவங்கள் உள்ள பல கற்களால் அமைக்கப்பட்ட ஒருமேடை கற்களைவிடப் பெரிதாகக் காணப்படுகிறது. அணுக்களால் ஆரம்பிக்கப்பட்டது அணுவாக இருக்குமல்லாமல் பெரிதாக ஒருநாளுமிராது.

2. "காரணம், கார்யம், இவ்விரண்டும் முற்றிலும் வேறுபட்டவை" என அவர்களுடைய மதம். அப்படி யானல் கார்யகாரணபாவமே ஸம்பவிக்காது. முற்றிலும் வேறுபட்ட வஸ்துக்களான பசுவும் குதிரையும் பரஸ்பரம்

கார்யமாகவோ காரணமாகவோ ஆவதில்லை. ஆதலால் முற்றிலும் பிந்நவஸ்துக்களுக்கு கார்யகாரணபாவம் என்பது பொருந்தாது.

3. காரணத்தில் இல்லாத கார்யம் அதிலிருந்து உண்டாகிறது என்பது அவர்கள் கொள்கை. இதை "அஸத்கார்யவாதம்" என்பர். முயற்கொம்பு போல் இல்லாத வஸ்துவிற்கு உற்பத்தி என்பது சம்பவிக்காது.

4. முற்றிலும் வேறுபட்ட கார்யமே ஆரம்பிக்கப்படுகிறது என்று அங்கீகரிக்கும்பக்ஷத்தில் காரணத்தில் இல்லாத "குருத்வம்" முதலிய குணங்கள் கார்யத்தில் ஸம்பவிக்கக்கூடும். அப்படியானால் "காரணத்தில் உள்ள குணங்களே கார்யங்களிலும் அவற்றிற்குச் சமமான குணங்களை ஆரம்பிக்கின்றன" என்ற அவர்களுடைய கொள்கைக்கு பங்கம் ஏற்பட்டுவிடும்.

5. அவர்கள் கூறுகின்றபடி பரமாணுக்கள் உள என்பதற்கும் பிரமாணமில்லை. அவற்றை சாதிக்க அவர்கள் கூறும் அநுமானப்பிரமாணமும் வேதவிருத்தமாதலால் அங்கீகரிக்கத்தக்கதல்ல என்று அபிப்ராயம்.

6. "கார்யங்கள் எல்லாம் அவற்றைவிட குறைந்த பரிமாணமுள்ள காரணங்களாலேயே ஆரம்பிக்கப்படுகின்றன" என்ற ஒரு நியமத்தை அவர்கள் அங்கீகரிக்கிறார்கள். அதுவும் சரியல்ல. பெரிய பஞ்சு உருண்டையிலிருந்து உண்டாகும் சிறிய நூலில் அந்த நியமம் காணப்படவில்லை.

नापि प्रधानपरिणामवादः; तस्य चेतनानधिष्ठितस्य कार्योत्पादे स्वतोऽसामर्थ्यात्, लोके रथादेश्चेतनाधिष्ठितस्यैव प्रवृत्तिदर्शनात्।

ஸாங்கியர்களின் "பிரதான பரிணாமவாதமும்" சரியல்ல. பிரதானம் ஜடமானதால் சேதனஸம்பந்தமின்றி தானாகவே கார்யத்தை ஆரம்பிக்கும் திறமை அதற்கில்லை. உலகில் தேர் முதலிய ஜட பதார்த்தங்கள் சேதநனான புருஷசம்பந்தத்தாலேயே செல்லுகின்றது என்பதைக் காண்கிறோம்.

**तत्सद्भावेऽपि प्रमाणाभावात्, "अजां" इत्यादिश्रुतेश्च तेजोऽबन्नादिप्रकृत्यव्याकृतपरत्वाच्च।**

மேலும் ஸாங்கியர்கள் கூறுகின்றபடி "பிரதானம்" என்ற ஒரு வஸ்து இருக்கின்றது என்பதற்கே பிரமாணம் ஒன்றுமில்லை. அதற்குக் காரணமாக அவர்கள் கூறும் "அஜாம்" முதலிய வேதவாக்கியங்களும் தேஜஸ், அப்பு, பிருதிவீ முதலியவற்றிற்குக் காரணமாக உபனிஷத்துக்களில் பிரசித்தமான "அவ்யாக்ருதம்" என்ற வஸ்துவையே குறிப்பிடுகின்றன.

**'अजामेकां लोहितशुक्लकृष्णां बह्वीं प्रजां जनयन्तीं सरूपाम्'**
என்ற வேதவாக்யம் ஸாங்கியர்களால் பிரதானஸாதகமாகக் கூறப்படுகிறது.

**किन्तु श्रुतिषु "सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" "तस्माद्वा एतस्मादात्मन आकाशस्संभूतः" "सदेव सोम्येदमग्र आसीत्" "तदैक्षत बहुस्यां प्रजायेयेति" "यतो वा इमानि भूतानि जायन्ते"**

**"यस्सर्वज्ञस्सर्वविद्यस्य ज्ञानमयं तपः।**
**तस्मादेतत् ब्रह्म नाम रूपमन्नं च जायते॥**

**इत्यादिषु सहस्रशः परमात्मन एव चेतनाज्जगदुत्पत्तिश्रवणात्।**

ஆனால், "ஸத்யம் ஞானமனந்தம் ப்ருஹ்ம"— "தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ்ஸம்பூத:" —

"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்", "தைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி", "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே", "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்யஸ்ய ஞாநமயம் தப:; தஸ்மாதேதத் ப்ருஹ்ம நாம ரூபமந்நம்ச ஜாயதே" முதலிய பல வேதவாக்கியங்களில் சேதநனான பரமாத்மாவிடமிருந்தே ஜகத் உண்டாகின்றது எனக் கேட்கப்படுகின்றது.

विलक्षणयोरपि कार्यकारणभावस्य गोमयवृश्चिक, पुरुषकेश रोमादौ दर्शनात्, आरम्भपरिणामव्यतिरेकेण तत्वतोन्यथाभाव लक्षणविवर्तरूपप्रकारस्यापि कार्योत्पादे स्वप्नप्रपञ्चशुक्तिरजतादौ दर्शनात्, अत्र विवर्तवादस्य विवक्षितत्वात् ।

"सर्वं तं परादाद्योन्यत्रात्मनस्सर्वं वेद" इत्यादिश्रुतौ आत्मनोऽन्यत्र जगद्दर्शनस्य निन्दितत्वाच्च; "घटोस्ति पटोस्ति" "घटः स्फुरति, पटः स्फुरति" इति सत्तास्फुरणानुविद्धतया अनुभूयमानस्य जगतो मृदनुविद्धघटस्य मृत्कार्यत्ववत् सत्तास्फुरणात्मकात्मकार्यत्वस्यैव युक्तत्वाच्चात्मैव जगदुत्पत्यादि कारणमित्यभिप्रेत्याह - बीजस्यान्तरिवेति ।

ஜடமான சாணத்திலிருந்து சேதநமான தேளும், சேதநமான புருஷசரீரத்திலிருந்து ஜடமான ரோமங்களும் உண்டாவதால் "ஜடம்-சேதநம்" என்று விலக்ஷணங்களான இருபதார்த்தங்களுள் ஒன்று மற்றொன்றுக்கு கார்யமாகவோ காரணமாகவோ ஆகலாம். ஆதலால் சேதநனான பரமாத்மாவிடமிருந்தே ஜடமான பிரபஞ்சம் உண்டாகிறது என்பதில் எவ்விதமான தோஷமுமில்லை.

(இது "சேதநத்திலிருந்து ஜடம் உண்டாகாது" என்று கூறும் நையாயிகர்களுக்கு ஸமாதானம்.)

ஸ்வப்ந காலத்தில் தோன்றும் பிரபஞ்சத்திலும், கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியிலும், நையாயிகர்களின் ஆரம்பவாதமோ, ஸாங்கியர்களுடைய பரிணாம வாதமோ பொருந்தாதாகையால் "விவர்த்த வாதத்தையே" அவ்விடங்களில் அங்கீகரிக்கவேண்டும். "விவர்த்தம்" என்பது ஒரு வஸ்துவின் தத்வம் வேறுவிதமாகத் தோன்றுவதே. அவ்வித விவர்த்தவாதமே பரமாத்மாவிடமிருந்து ஜகத் உண்டாயிற்று என்ற இடத்திலும் ஆச்ரயிக்கப்படுகிறது.

"ஸர்வம் தம் பராதாத் யோந்யத்ராத்மநஸ்ஸர்வம் வேத"—முதலிய சுருதிகளில் ஆத்மாவைத் தவிர வேறு இடத்தில் ஜகத் இருப்பதாக அறிவதை நிந்தித்திருப்பதாலும் "குடம் இருக்கின்றது, துணி இருக்கின்றது" "குடம் பிரகாசிக்கிறது, துணி பிரகாசிக்கிறது" என்றெல்லாம் "ஸத்தை" "பிரகாசம்" இவற்றுடன்கூடவே கலந்து ஜகத் அநுபவிக்கப்படுகின்றபடியாலும் ஸத்தாஸ்வரூபமாயும் பிரகாசஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவே ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்கெல்லாம் காரணம் என்ற அபிப்ராயத்துடன் —பீஜஸ்யாந்தரிவ— என்ற சுலோகத்தைக் கூறுகிறார்.

விளக்கம்: "மிருத் கட:" என்று மண்ணுடன் கலந்தே குடம் தோன்றுவதால் குடம் மண்ணின் கார்யம் என்று கூறுவதுபோல ஆத்மாவுடன் கலந்தே, "ஸந் கட:—கடோஸ்தி,—கட: ஸ்புரதி"—என்றெல்லாம் தோன்றுகின்றபடியால் ஜகத் ஆத்மாவின் கார்யம் என சித்திக்கின்றது.

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।

मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ 2

इदं - अनुभूयमानं सर्वं जगत्, प्राक् - उत्पत्तेः पूर्वं, निर्विकल्पं- भोक्तृभोग्यादिविकल्परहितं आत्ममात्रमेवासीत्। "आत्मा वा इदमेक एवाग्र आसीत्" "सदेव सोम्येदमग्र आसीत्" इत्यादिश्रुतेः। तत्र दृष्टान्तमाह - बीजस्येति। बीजस्यान्तः - मध्ये, अङ्कुरइव। उपलक्षणमेतत् - पल्लवपत्रपुष्पफलशाखाविटपात्मक वृक्षो यथा उत्पत्तेः पूर्वं निर्विकल्पं बीजमात्रमासीत् तद्वत्। पुनः पश्चात्, सृष्टिसमये, मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतं-मायया- ईश्वराधिष्ठितया, कल्पितौ यौ देशकालौ, तयोश्चकलना-संबन्धः, तद्वैचित्र्येण चित्रीकृतं - नानाविधभेदभिन्नया विभक्तं, "तं नामरूपाभ्यामेव व्याक्रियत" इति श्रुतेः।

"இதம் ஜகத்"—நம்மால் அநுபவிக்கப்படும் எல்லா ஜகத்தும், "ப்ராக்"—உண்டாவதற்கு முன்பு, "நிர்வி கல்பம்"—போக்தா, போக்யம் முதலிய வேறுபாடற்ற ஆத்மஸ்வரூபமாகவே இருந்தது. "ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்",—"ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" முதலிய சுருதிகள் இதற்குப் பிரமாணம். "பிஜஸ் ஸ்யாந்தரிவாங்குர:" — என்பதால் இதற்கு உதார ணத்தைக் கூறுகிருர். "பீஜஸ்யாந்த:"—விதைக்குள், "அங்குர இவ"—முளைபோல், இது உபலக்ஷணம். (பல வற்றைக் கூறவேண்டியிருக்க மாதிரிக்காக ஒன்றி ரண்டைமட்டும் கூறுவதை "உபலக்ஷணம்" என்பர்.) தளிர், இலை, பூ, பழம், கிளை, கொத்து இவ்வளவும் சேர்ந்த ஒரு மரம், உண்டாவதற்குமுன் மேற்படி வேறு பாடுகள் அற்ற விதையாகமட்டும் எவ்விதம் இருந்ததோ, அதுபோல் (இப்பிரபஞ்சம் உற்பத்திக்குமுன் ஆத்ம ஸ்வரூபமாகவே இருந்தது.) "புந:"—பின்பு சிருஷ்டி

சமயத்தில், "மாயாகல்பிததேசகாலகலநாவைசித்ர்ய— சித்ரீக்ருதம்" —ஈச்வராதிஷ்டித மாயையால் கற்பிக்கப் பட்ட தேசம், காலம் இவற்றின் சம்பந்தத்தால் பலவித வேறுபாடுகளால் பிரிக்கப்பட்டதாக இருக்கிறது. இதற்கு "தம் நாமரூபாப்யாமேவ வ்யாக்ரியத" என்ற சுருதி வாக்யம் சான்று.

**ननु कथमीश्वरस्य बाह्यसाधनरहितस्य जगदुत्पादकत्वं? लोके कुलालादेर्बाह्यसाधनवत एव कार्यकरत्वदर्शनादित्याशङ्क्य, ईश्वरस्यानाद्यनिर्वचनीयमायाशक्त्युपहितस्य स्वेच्छामात्रेणैवेन्द्रजालिकवत्, देवर्षिपित्रादियोगिवच्चोपपद्यते जगदुत्पादकत्व मित्यभिप्रेत्याह**-मायावीवेत्यादिना.

தன்னைவிட வேறு எவ்வித சாதனங்களுமற்ற ஈச்வரன் எப்படி இவ்வுலகை சிருஷ்டிசெய்யமுடியும்? உலகில் குயவன் முதலியவர்கள் அவர்களைவிட வேருன மண் முதலிய சாதனங்களைக்கொண்டே பானை முதலிய கார்யங்களைச் செய்வதைக் காண்கிறோம். அவ்விதமே தானே ஈச்வரனும் சிருஷ்டிக்கவேண்டும்? என்று ஆசங்கை செய்துகொண்டு அதற்கு ஸமாதானமாக அநாதியாயும், "இது இவ்விதம்தான்" என ஸ்பஷ்ட மாகக் கூறமுடியாததுமான மாயாசக்தியோடு கூடிய ஈச்வரன் அவரது இச்சாமாத்திரத்திஞலேயே உலகி லுள்ள இந்திரஜாலவித்தை செய்யும் மாயாவிபோலும், தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் இவர்களுள் உள்ள யோகிபோலவும் ஜகத்தை சிருஷ்டி செய்கிருர் என்று கூறலாம் எனக் கருதி "மாயாவீவ" முதலியவற்ருல் அதைக் கூறுகிருர்.

**यः-परमेश्वरः, मायावीव - लोकप्रसिद्धेन्द्रजालिकमायाविवत्, महायोगीव - विश्वामित्रादिमहायोगिवच्च, स्वेच्छया - स्वसंकल्प**

मात्रेण। विजृम्भयति - इदं जगदुत्पादयति, "इन्द्रो मायाभिः पुरुरूप ईयते" 'तदात्मानं स्वयमकुरुत" "सच्चत्यच्चाभवत्" इति श्रुतेः

"ய:"—எந்த பரமேச்வரன், "மாயாவீவ" உலகப் பிரசித்தமான ஐந்திரஜாலிகமாயாவி போலவும், "மஹா யோகீவ"—விச்வாமித்ரர் முதலிய மேன்மை பொருந்திய யோகிபோலவும், "ஸ்வேச்சயா"—தனது இச்சாமாத் திரத்தாலேயே "விஜ்ரும்பயதி"—இவ்வுலகை சிருஷ்டிக் கின்றூரோ, (அப்படிப்பட்ட தக்ஷிணு மூர்த்தியின் பொருட்டு நமஸ்காரம்)

மாயையைத் தவிர வேறு ஸாதனமில்லை என்பதை நிரூபிக்க உலகப்பிரசித்த மாயாவி த்ருஷ்டாந்தமும், ஸங்கல்பமாத்திரத்தால் சிருஷ்டிக்கிறூர் என்பதை நிரூபிக்க மஹாயோகி திருஷ்டாந்தமும் கூறப்பட்டுள்ளது என வேருெரு உரையில் காணப்படுகிறது.

இவ்விஷயத்தில் "இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே, ததாத்மாநம் ஸ்வயமகுருத, ஸச்சத்யச்சாபவத்" என்ற சுருதி வாக்கியங்கள் சான்று.

नापि मायया तस्य सद्वितीयत्वं, तस्या अपि कल्पितत्वात्। नापि तस्य कारणत्वेन विकारित्वं, जगत्कारणत्वस्यानाद्यनिर्वचनीय मायाघटिततयाकल्पितत्वेनोपलक्षणस्य तत्र विकारानापादकत्वात्। ततश्च तत्र कस्यापि दोषस्याभावात् ब्रह्मैव प्रत्यगभिन्नं सकल जगदुत्पत्तिस्थितिलयहेतुरिति भावः - तस्मै - नमः 2

மாயையும் கற்பித வஸ்துவானதால் அத்துடன் கூடிய பிருஹ்மம் இரண்டாவது பொருளுடன் கூடியதாக ஆகாது. "பிருஹ்மம் அத்விதீயம்" என்பதற்கு அதைத் தவிர வேறு உண்மையான பொருள் இல்லை என்று

அர்த்தமாதலால் மாயையைப்போல் எவ்வளவு வஸ்துக்கள் இருந்தாலும் எல்லாம் கற்பிதமானதால் "பிருஹ்மம் அத்விதீயம்" என்பதற்கு எவ்வித ஹாநியுமில்லை. பிருஹ்மம் காரணமாக இருப்பதால் அது விகாரி-மாறுதல் உள்ளது என்றும் ஆகாது. அதில் உள்ள காரணத்வம் அநாதி-அநிர்வசநீய-மாயாஸம்பந்தத்தால் ஏற்பட்டதாதலால் காரணத்வமும் கற்பிதம். கற்பிதமானதாலேயே அது பிருஹ்மத்திற்கு உபலக்ஷணமல்லாமல் விசேஷணமல்ல. (ஒரு வஸ்துவில் எப்பொழுதும் இல்லாத ஒரு பதார்த்தம் அதை மற்ற வஸ்துக்களிலிருந்து பிரித்து போதிக்குமேயானுல் அதை "உபலக்ஷணம்" என்பர்.) ஆகவே இங்கு எவ்வித தோஷமுமில்லாததால் பிரத்யகபிந்நபிருஹ்மமே ஸமஸ்தஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்குக் காரணம் என்று தாத்பர்யம். (2).

---

नन्वसदेव जगतः कारणं

(1) पिण्डादिनाशादेव घटाद्युत्पत्तिदर्शनात्,

(2) जागराद्यकालीनकार्यस्य चासत्पूर्वकत्वदर्शनात्, तद्दृष्टान्तेन जगतोपि तथात्वानुमानात्;

(3) "असद्वा इदमग्र आसीत्" इति श्रुतेश्चेत्य सद्वादमाशङ्क्याह – यस्यैवेति.

ஜகத்திற்கு அஸத்தே காரணம்

(1) மருத்பிண்டம்(மண் உருண்டை)முதலிய காரணஸ்வரூபம் நாசமடைந்த பிறகே குடம் முதலிய கார்யங்கள் உண்டாகின்றன என்பது காணப்படுவதாலும்,

(2) ஜாக்ரண ஆரம்பகாலத்தில் அதாவது தூங்கி எழுந்திருந்தவுடன் முதன் முதலில் ஏற்படும் கார்யம்

அஸத்திலிருந்தே உண்டாகிறது என்று தெரியவருவதால், அதை திருஷ்டாந்தமாகக் கொண்டு ஜகத்தும் அஸத்திலிருந்தே உண்டாயிருக்கவேண்டும் என்று அநுமானம் செய்யக்கூடுமாதலாலும்,

(3) "அஸத்வா இதமக்ர ஆஸீத்" என சுருதி இருப்பதாலும் அஸத்தே (சூன்யமே) ஜகத்திற்குக் காரணம் என்று ஆசங்கைசெய்துகொண்டு, "யஸ்யைவ" என்ற சுலோகத்தால் அதற்கு ஸமாதானம் கூறுகிறார்.

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्नपुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३

यस्य-प्रत्यगभिन्नस्य परमेश्वरस्य स्वरूपभूतं, सदात्मकं-सद्रूपं, स्फुरणमेव-चैतन्यमेव, असत्कल्पार्थगं-असत्कल्पाः-असत्तुल्याः स्वतस्सत्तारहिताः अनिर्वचनीया ये, अर्थाः-वियदाद्याः तान् गच्छतीत्यसद्कल्पार्थगं-अनिर्वचनीयवियदादिपदार्थनिष्ठमिति यावत् । भासते-प्रकाशते ॥

யஸ்ய—ஜீவாபிந்நனை பரமேச்வரனுடைய ஸ்வரூபமாயும், ஸதாத்மகம் — ஸத்ரூபமாயுமிருக்கும், ஸ்புரணமேவ சைதந்யமே, அஸத்கல்பார்த்தகம் — அஸத்பதார்த்தங்களைப்போல் தனக்கென்று ஒரு ஸத்தையற்ற ஆகாயம் முதலிய பதார்த்தங்களையடைந்து, பாஸதே—பிரகாசிக்கின்றதோ.

अयं-भावः-जगतोऽसत्कारणत्वे, "घटः असन् पटः असन्" इत्यसत एव सर्वत्रानुवृत्तिः स्यात्, न तु सतः । किञ्चतस्यासतः

अस्वप्रकाशत्वेन तत्र वर्तमानजगतः आन्ध्यमपि स्यात्। जगच्च सदनुविद्धं, प्रकाशते च। तथा च स्वतस्सत्त्वप्रकाशरहितं जगत् तदधिष्ठानभूतात्मसत्ताप्रकाशाभ्यामेव सत्ताप्रकाशवद्भवतीति तदाध्यस्तत्वेन तत्कारणकमेव जगत्।

नापि पिण्डादिनाशस्य घटादिकारणत्वं, अनुगतमृदादेरेव कारणत्वात्। जागराद्यकालीनस्य कार्यस्य चासद्पूर्वकत्वं नास्मत्सम्मतम्। सुषुप्तिकालीनसद्रूपात्मनः कारणत्वाङ्गीकारात्, सुषुप्तौ आत्मसत्वस्य च साधयिष्यमाणत्वात्॥

இதன் கருத்து :—இந்த சுலோகத்தில் "சூன்யமே ஜகத்திற்குக் காரணம்" என்று கூறும் சில பௌத்தர் களின் மதம் சரியல்ல என நிரூபணம் செய்யப்படுகிறது.

ஜகத் அஸத்திலிருந்து உண்டானதாக இருந்தால் "கட: அஸந், பட: அஸந்" (குடம் இல்லை, படம் இல்லை) என்று எல்லா பதார்த்தங்களிலும் அஸத்தின் தொடர்ச்சியே இருக்கும். ஸத்தின் தொடர்ச்சி இராது. ஆனால் "கட: ஸந், பட: ஸந்" (கடம் இருக்கிறது, படம் இருக்கிறது) என்று ஸத்தின் தொடர்ச்சியே காணப் படுகிறது. மேலும் அஸத் பதார்த்தம் ஸ்வயம் பிரகாசிக்கா தாகையால் அதிலுள்ள இவ்வுலகமும் பிரகாசிக்காது. ஜகத்தோ ஸத்தின் தொடர்ச்சியுள்ளதாகவும், பிரகாசிப்ப தாகவும் இருக்கிறது. ஆதலால் ஸ்வயம் ஸத்தையும் பிரகாசமுமற்ற ஜகத் அதற்கு அதிஷ்டானமான ஆத்மாவின் ஸத்தாப்பிரகாசங்களாலேயே ஸத்தையுள்ள தாயும் பிரகாசமுள்ளதாயுமாகிறது. ஆதலால் ஜகத் திற்குக் காரணம் ஆத்மாவே.

குடத்தில் காணப்படும் மண்ணே அதற்குக் காரண மாதலால், காணப்படாத பிண்டநாசம் காரணம் என்பது சரியல்ல. ஜாகரண ஆரம்பகாலத்திலுள்ள காரியமும்

அஸத்திலிருந்து உண்டானது என்பது எங்களுக்குச் சம்மதமல்ல. ஸுஷுப்தி காலத்திலுள்ள ஸத்ரூபமான ஆத்மாவே அதற்குக் காரணம். ஸுஷுப்திகாலத்தில் ஆத்மா இருக்கின்றது என்பது பின்பு ஸாதிக்கப்படப் போகின்றது.

"असद्वा इदमग्र आसीत्" इति श्रुतिश्चानभिव्यक्तसद्कारणपरा, "कथमसतस्सज्जायेत" इति श्रुत्यैवासद्वादस्य प्रतिषेधात् इति। अथवा - ननु घटस्सन् पटस्सन् इत्येवं सत्त्वेन प्रतीयमानस्य जगतः कथमसत्कल्पत्वमध्यस्तत्वेनोच्यते ? इत्याशङ्कयाह - यस्यैवेत्यादिना.

"அஸத்வா இதமக்ர ஆஸீத்" (இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டிக்குமுன்பு அஸத்தாகவே இருந்தது) என்ற சுருதியும் ஸ்பஷ்டமாகப் புலப்படாத ஸத்ரூபமான காரணத்தையே குறிப்பிடுகிறதல்லாமல் இதற்குக் காரணம் அஸத் என்று கூறவில்லை. ஏனென்றால் "கதமஸதஸ்ஸஜ்ஜாயேத" (அஸத்திலிருந்து ஸத் எவ்விதமுண்டாகும்?) என்ற சுருதியே அஸத்காரண வாதத்தை நிஷேதிக்கிறது.

(இவ்விதம் அஸத்காரண வாதத்தை நிராகரணம் செய்ய இந்த சுலோகம் தோன்றியது என தாத்பர்யம் வர்ணிக்கப்பட்டது. இதற்கே வேறுவிதமாக தாத்பர்யத்தை வர்ணிக்க "அதவா"—என்று தொடங்குகிறார்.) "கட: ஸந், பட: ஸந்" என ஸத்தாகத் தோன்றும் இந்த ஜகத் அத்யஸ்தம் ஆகையால் அஸத்திற்குச் சமம் என்று ஏன் கூறப்படுகின்றது? என்ற சங்கைக்கு ஸமாதானம் "யஸ்யைவ"—என்று ஆரம்பமாகும் சுலோகத்தால் உரைக்கப்படுகிறது.

सत्प्रकाशरूपाधिष्ठानात्मसत्त्वैवारोपित जगन्निष्ठतया प्रतीयते. न तु तस्य स्वतस्सत्त्वम्। "अथात आदेशो नेति नेति" "नेह नानास्ति किञ्चन" इत्यादिश्रुत्या प्रपञ्चस्य प्रतिषेधात्, भ्रान्त्यापि तत्प्रतीत्युपपत्तेश्च, तस्यासद्विलक्षणत्वाङ्गीकाराच्च शशविषाण समत्वम्। ततोऽपरोक्षप्रतीतिरप्युपपद्यते इति तात्पर्यार्थः। अक्षरार्थस्तु पूर्ववत्।

பிரபஞ்சாத்யாஸத்திற்கு அதிஷ்டானமாயும், ஸத்ரூப மாயும், பிரகாசரூபமாயுமுள்ள ஆத்மாவின் ஸத்தையே, அதில் ஆரோபிதமான ஜகத்தில் இருப்பதாகத் தோன்று கிறதல்லாமல் ஜகத்திற்கு தனக்கென்று ஒரு தனி ஸத்தை கிடையாது. ஏனென்றால் "அதாத ஆதேசோ நேதி நேதி, நேஹ நாநாஸ்தி கிஞ்சந" முதலிய சுருதி களால் ஜகத்தின் ஸத்தை நிராகரிக்கப்பட்டிருக்கிறது. ஜகத்தில் ஸத்தையின் தோற்றம் பிரமத்தாலும் ஏற்பட லாம். ஜகத்திற்கு சொந்த ஸத்தையில்லையானாலும் அஸத்திற்கு விலக்ஷமாக இதை அங்கீகரிக்கின்ற படியால் இது முயற்கொம்புக்குச் சமமாக ஆகாது. இப்படி அங்கீகரிப்பதாலேயே ஜகத் பிரத்யக்ஷமாகத் தோன்றுவதும் பொருத்தமுள்ளதாக ஆகின்றது என்பது தாத்பர்யார்த்தம். பதார்த்தம் முன்பு கூறப் பட்டதுபோலவே.

येयमसत्ये प्रपञ्चे सत्यत्वबुद्धिः, अनात्मनि देहादावात्मत्व-बुद्धिः, इयमेव सकलसंसारनिदानम्। तस्याश्च निवृत्तिः गुरूपदिष्टतत्त्वमस्यादिमहावाक्यजन्यापरोक्षज्ञानेन मूलाज्ञाननिवृत्त्यै वेत्यभिप्रायेणाह-साक्षादित्यादिना। यः-गुरुरूपः परमेश्वरः, आश्रितान्-विधिवदुपसन्नान्, तत्त्वमसीति वेदवचसा - यज्जगत्कारणं सदद्वितीयं ब्रह्म, तत्त्वमसि, न ततो भिन्नोऽसीति, वेदवचसा - वेदवाक्येन, साक्षात् - अपरोक्षत्वेन, तत्त्वं, बोधयति - ज्ञापयतीत्यर्थः।

